# சி
# வா
# ஜி



உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம் – வீணில்
உண்டுகளித்திருப்போரை
நிந்தனை செய்வோம்.

விழலுக்கு நீர்ப்பாய்ச்சி
மாயமாட்டோம் - வெறும்
வீணருக்கு உழைத்துடலம்
ஓயமாட்டோம்.

—பாரதி.

வேனில் மலர்-1968



காந்தியடிகளின் நூற்றுண்டு விழாவை பாரதம் கொண்டாடுகின்றது.

அண்ணல் காட்டிய அறவழிகளில் நாம் எவ்வளவு தூரம் நம்பிக்கையுடன் முன்னேறி வருகிறோம் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டியதுதான் உண்மையில் அண்ணலுக்கு நாம் செலுத்தும் அஞ்சலி.




# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


# சொல்லாட்சி

தமிழகத்தில் நடைபெற்றுவரும் சொல்லாட்சிக்கு ஒரு ஆண்டு நிறைவேறிவிட்டது; அதாவது திறமையான, கவர்ச்சிகரமான சொற்களைக்கொண்டு தி.மு.க.வினர் கைப்பற்றிய மாநில ஆட்சி.

அண்மையில் நடைபெற்ற பஸ் தொழிலாளர் — மாணவர் மோதலின் விளைவாக, வெறும் சொல் மயக்கத்தால் ஒரு நாட்டை ஆண்டுவிட முடியாது என்ற உண்மையை ஆட்சியாளர்கள் தெளிவாகப் புரிந்துகொண்டிருப்பார்கள். இனிமேல் செயலாட்சியாக அதை மாற்றிக்கொள்ள வேண்டுமென்ற உண்மையையும் உணர்ந்தால் சிறப்பாக இருக்கும்.

இருபதாண்டுகள் காங்கிரஸ் ஆட்சி நடைபெற்ற பிறகும், எண்ணற்ற முன்னேற்றத் திட்டங்கள் நிறைவேறிய பிறகும், காங்கிரஸ் ஆட்சியைத் தமிழ்மக்கள் தள்ளிவிட்டபோது நம்பமுடியாததாகவே இருந்தது. வெற்றி பெற்றவர்களே நம்பமுடியாத அளவுக்கு அது வியப்பளித்தது. சொல்லாட்சிக்கு மக்கள்மனதை வசீகரிக்கும்சக்தி அவ்வளவு அதிகமாக இருந்ததே காரணம்.

சமீபத்து விளைவுகளால் பொதுவாக நன்மை விளைந்திருக்கிறது என்றே கொள்ள வேண்டும். சொல்மயக்கம் சற்றே கலையத்தொடங்கிவிட்டது.

மாணவர்கள்: ஒரு ஆட்சியைக் கவிழ்ப்பதும் நிலைநாட்டுவதும் தங்கள் கையில் இருக்கிறது என்ற தவறான எண்ணமும் பெருமிதமும் மாணவர் சமூகத்துக்கு ஏற்பட்டு வந்தது. மாணவசமூகம் தவிர ஏனையசமூகங்களும் நாட்டில்உண்டு என்ற சிந்தனை மாணவர்களுக்கு ஏற்பட்டுள்ளது. இதனால் மாணவர்கள் இனி சரியான சிந்தனையை மேற்கொள்ள இது உதவும்.

தொழிலாளர்கள்: தொழிலாளர்உலகமும் இதேபோன்ற உண்மை உணர்வைப் பெறவும் இது உதவும்.

ஆட்சியாளர்கள்: ஒவ்வொரு சமூகத்தையும் தனித்தனியாகத் தட்டிக்கொடுத்து இனியவார்த்தைகளைக்கொண்டுமாத்திரம் ஆட்சியை நடத்திக்கொண்டுபோய்விடமுடியும் என்று எண்ணுவது எவ்வளவு தவறு என்பதைப் புரிந்துகொள்ள இது உதவும்.

காங்கிரஸ்: மாணவர்கள், தொழிலாளர், இப்படி சமூகம் சமூகமாகச் சொல்லாட்சிக்குத்தான் இணங்குவார்கள் என்பது உண்மையல்ல என்பதை அறிந்து ஆறுதல் அடையவும் மேற்கொண்டு தங்கள் வலிமையைப் பெருக்கிக்கொள்ளும் முயற்சியில் ஊக்கம் பெறவும் இது உதவும்.

எனவே இயற்கையாக, அனைவருக்குமே சிறந்த படிப்பினைகள் கிடைக்கக்கூடிய ஒரு முழு ஆண்டு இதோ முடிந்திருக்கிறது. எதிரே இருக்கும் புதிய ஆண்டில் அவ்வவரும் அவரவர் வழியில் ஆக்க வேலைகளில் ஈடுபட்டுப் பொதுவாக நாட்டுக்கு நன்மைகள் சேருமாறு முயற்சிகள் புரியலாம். புதிய ஆண்டை வரவேற்று அனைவருக்கும் நல்வாழ்த்துக்களை அறிவித்துக்கொள்கிறோம்.

# அதிசய கடிகாரம்

— உல்ப் லாவ்



மூன்றரை சென்டி மீட்டர் நீளம் கொண்ட சின்னஞ்சிறு ‘அலாரம் கடிகாரத்தைப் பார்த்திருக்கிறீர்களா? இக்குட்டி அலாரம் கடிகாரத்திற்குள் பொத்தான் அளவுக்கு ஒரு பாட்டரி இருக்கிறது. இனிய நாதத்துடன் அலாரம் இயங்குவதற்கு இப்பாட்டரி உதவுகிறது. இப்பாட்டரி ஓராண்டுக் காலம் இயங்கும் ஆற்றல் வாய்ந்தது. ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசில் பிராங்க்பர்ட் நகரில் நடைபெற்ற சர்வதேசவசந்தகால கண்காட்சியில் இந்த அதிசயமான ‘குட்டி’ அலாரம் கடிகாரம் இடம் பெற்றிருந்தது.

பிராங்க்பர்ட் கண்காட்சியில் 3,200ஸ்தாபனங்கள் பங்கெடுத்துக்கொண்டன. இவற்றில் நான்கில் ஒரு பங்கு 37 வெளிநாடுகளில் இருந்து வந்தவை. கண்காட்சி திறக்கப்பட்ட சிலமணி நேரத்திற்கெல்லாம் பலவிதமான “புதுமையான பண்டங்களுக்கு” ஏராளமான “ஆர்டர்கள்” குவிந்தன.

இக்கண்காட்சியைத் தொடக்கிவைத்த பொருளாதார அமைச்சர் கார்ல் ஷில்லர், இசைக்கருவிகள் அரங்கில் இடம் பெற்றிருந்த பல்வேறுவிதமான கருவிகளைக் கண்டு மெய்மறந்துபோனார். கையில் தூக்கிச் செல்லக்கூடிய சிறிய பிரயாணப் பெட்டிக்குள் அடங்கக்கூடிய “சிறிய எலக்டிரானிக் ஆர்கன்” கருவியைக் கண்டு அவர் பெரிதும் பாராட்டினார். இம்முறை 240ஸ்தாபனங்கள் புதுமையான இசைக் கருவிகளை வைத்திருந்தன. கிழக்கு ஜெர்மனியும் இம்முறை இக்கண்காட்சியில் பங்கெடுத்துக்கொண்டிருந்தது.

வர்ணஜாலங்களில் மக்கள் மயங்குகிறார்கள் என்பது மிகையல்ல. கண்காட்சியில் இடம் பெற்றிருந்த பியானோ இசைக்கருவிகள் கண்ணைப்பறிக்கும் பலவிதமான வர்ணங்களில் தயாரிக்கப்பட்டிருந்தன. கடிகாரத் தொழில் துறையினர் புரட்சி செய்திருந்தனர். இரண்டு சென்டிமீட்டர் உயரமும், மூன்றரை சென்டிமீட்டர் நீளமும் கொண்ட குட்டி அலாரம் கடிகாரம் அனைவரது கவனத்தையும் கவர்ந்தது. 17 செயற்கைக் கற்கள் பதியப்பெற்ற சிறு இயந்திரப்பகுதிகள் இம்மியும் பிசகாமல் “டிக், டிக்” என்று ஓடிக்கொண்டிருக்கின்றன. பொத்தான் அளவுக்கே அமைந்த புதிய சிறிய பாட்ரி மெல்லிய இனிய நாதத்துடன் அலாரம் இயங்குவதற்கு உதவுகிறது. இந்த பாட்டரி, ஓராண்டு காலத்திற்கு பலன் அளிக்கும் ஆற்றல் வாய்ந்தது. இந்தகுட்டி அலாரம் கடிகாரத்தின் விலை 240 ரூபாய் தான். எனவே மக்கள் போட்டிபோட்டுக்கொண்டு இக் ‘குட்டி’ கடிகாரத்தை வாங்கினார்கள்.

இக்கண்காட்சியில் இடம் பெற்றிருந்த பண்டங்களின் விலைகள் கொள்ளை மலிவு. எனவே பேர பேச்சுவார்த்தை மிக சுலபத்தில் முடிந்துவிட்டன. கண்காட்சியில் தொடங்கிய முதல் நாளன்றே 1 இலட்சம் பேர்கள், கண்டுகளித்தார்கள். இக் கண்காட்சியின் முக்கிய அம்சம், கிழக்கு ஐரோப்பிய நாடுகள் காட்டிய ஆர்வமாகும். ருமேனியாவின் மரச்சாமான்கள், பின்லாந்து கண்ணாடிப் பாத்திரங்கள், டென்மார்க் பீங்கான்கள், பிரிட்டிஷ் கம்பளங்கள், பிரஞ்சு காகிதம், ஜப்பான் மின்சார சாதனங்கள், ஜெர்மன் இயந்திர சாதனங்கள் இக் கண்காட்சியில் சிறப்பான பெயர் பெற்றிருந்தன.



# உலகத்தின் இதய கீதம்

**— மாக்ஸிம் கார்க்கி**



"அன்பின் அருவிக்கு ஊற்றாய் அமைந்த
அன்னையே! போற்றியோர் ஆயிரம் போற்றி!!

"நொண்டிப் புலி" என்றும், தாமர் லேன் என்றும் 'பாவி'கள் குறிப்பிட்ட தைமூரின் கதை இது. வையமுழுவதையும் பொடி சாம்பலாக்க முனைந்தவனின் கதை இது.

தைமூரின் காலடியில் ஐம்பதாண்டு மிதியுண்டு கிடந்தது. மதவேழத்தின் கால்களால் உருச்சிதையும் எறும்புப் புற்றுகள் போல, எண்ணற்ற பல நகரங்களும், அரசுகளும் அவனது இரும்புப் பாதத்தால் நசுக்குண்டொழிந்தன. தைமூர் சென்ற நாலுதிசைகளிலும் குருதி வெள்ளம் அலைவீசி ஓடிற்று.

ஜஹாங்கிர்... அவனது ஆருயிர்ச் செல்வன். அருமருந்தன்ன தன் புதல்வனை விழுங்கிய மரணத்தைப் பழிதீர்ப்பதற்காக தன்னால் வெற்றிகொள்ளப்பட்ட நாடுகளிலுள்ள மக்களைக் கொன்று மலைமலையாகக் குவித்தான். இந்தச் சவங்களின் எலும்புகளை மரணத்தின் ஆட்சிக்கெதிரான கோபுரங்களாகக் குவித்தடுக்கினான்! மரணத்தின் செயல்வினை அனைத்தையும் தானே புரிந்து அதனைச் செயலிழக்கச் செய்தான்!

தைமூரின் புதல்வன் ஜஹாங்கிர் இறந்தபோது சாமர்கந்தின் மக்கள் கருப்புடை அணிந்து தமது சிரங்களில் தூசும், சாம்பலும் படிந்த தோற்றத்துடன் தைமூரைச் சந்தித்தனர். அன்று முதல் ஒட்டரே என்னும் ஊரில் அவனுக்கு அந்திம நாள் வரும்வரை அவன் முகத்தில் இளஞ்சிரிப்புக் கூட மலரவில்லை. இதயத்தில் ஒரு துளி இரக்கத்துக்கும் இடந்தராமல், கடுகடுத்துச் சினம்பொங்கும் முகத்தோடு, வணங்காமுடியானாக முப்பதாண்டுக் காலமிருந்தான் தைமூர்!

தனிப்பெரும் சக்தியான தாய்மையைப்போற்றுவோம்! சாவும் தன் தலைவணங்கித் தாள் பணியும் தாய்மையைப் போற்றி இசைப்போம்! உலகிற்கு இரத்தவெறி பிடித்த சாபக்கேடாகத் தோன்றியவன், சாவின் கேசவன், தைமூர் ஒரு தாயின் முன்னிலையில் எவ்வாறு தலைவணங்கி நின்றான் என்பதைக் கூறும் கதை இது:

கனிகுலா பள்ளத்தாக்கிலே ஒரு நாள்...

மல்லிகைப் பூக்களும், ரோஜா மலர்களும் அங்கு சரஞ்சரமாகப் பூத்துக் குலுங்கின. சாமர்க்கந்துக் கவிஞர்கள் அந்த படுகையை 'மலர்ப்படுகை' என்று புகழ்வார்கள். நகரில் நெடிதோங்கி நின்ற மாடங்கள் தொலைவிலே தெரிந்தன.

தைமூர் பெக் எழில்மிகு பட்டங்கி அணிந்திருந்தான். விலை மதிக்கவொண்ணாத முத்துச்சரமோடிய அங்கி அது. அதில் தைக்கப்பட்டிருந்த முத்துக்கள் ஐயாயிரத்துக்குக் குறையாது! அவனது நரைத்த தலைமீதணிந்திருந்த தொப்பியில் கோக்கப்பட்டு அசைந்தாடிய சிவந்த மாணிக்க மணியானது உலகை அளந்தறியும் பயங்கரமான சிவப்பு விழிபோலத் தோன்றிற்று.

கூடாரத்தின் தரைமீது விரிக்கப்பட்டிருந்த இரத்தன ஜமுக்காளத்தின் அழகு நெஞ்சையள்ளியது. முன்னூறு தங்க ஜாடிகள் அந்த விரிப்பின் மீது வைக்கப்பட்டிருந்தன. அத்தனையிலும் திராட்சை மதுரசம்! இராஜ விருந்துக்கான ஏற்பாடுகள்!

தைமூருக்குப் பின்னால் சற்று ஒதுங்கி இசைவாணர்கள் வீற்றிருந்தனர். அவனுக்கு அருகே யாரும் இல்லை. தைமூரின் காலருகே அவனது உறவினர்கள், அரசர்கள், இளவரசர்கள், தளபதிகள் அமர்ந்திருந்தார்கள். உலகை அழித்தொழிக்கும் அந்த மன்னனுடன் அந்தக் கூட்டத்தினருள் கவிஞர் கிர்மானியும் இருந்தான்.

"கிர்மானி" என்றழைத்துக் கவிஞனிடம் பேசத் தொடங்கினான் தைமூர்.

"என்னை நான் விற்பதானால் நீ என்ன விலை கொடுப்பாய்"

"இருபத்தைந்து அஸ்கர்கள் தருவேன்" என்றான் கவிஞன்.

"என் இடுப்பில் அணிந்துள்ள கச்சைக்கே அந்த விலையாகுமே!" என்று வியப்புடன் கேட்டான் தைமூர்.

" அதற்குதான் அந்த விலை மதிப்பு. தங்கள் விலை மதிப்பு ஒரு செப்பு நாணயம் கூடப்பெருது."

உலகுக்கே, அழிவூட்ட வந்தவனை அந்த அரசர்க்கரசன் முகம் நோக்கி கவிஞன் கிர்மானி இவ்வாறு கூறினன். அவன் மெய்மையின் நண்பன். அவன் புகழ் நெடிது வாழ்க!

திகிலும் திகைப்பும் நிலவிய வேளை! அது!

கோடையிடி முழக்கும் முகிலிடையிருந்து மின்னற் கோடுகீறி எழுவது போல, திகில்நிறைந்த அந்தச் சூழ்நிலையின் அமைதி கலைத்து ஒரு குரல் ஆணவ ஓலம் ஒலித்தது. அதிலே மரணத்தால் தாக்குண்ட ஆன்ம வேதனை கலந்திருந்தது. உயிர் வாழும் மனிதர் அனைவரையும் அடியோடு வெறுக்கும் அந்தக் குரல் சுல்தான் பேயசித்தை வெற்றி கொண்ட தைமூரின் செவியில் பாய்ந்தது.

"யாரது? பாருங்கள்" பேரரசன் கட்டளையிட்டான்.

"எவளோ ஒருத்தி. பைத்தியம் போலிருக்கிறது. அழுக்கு படிந்த தோற்றம். கந்தல்உடை. அராபிய மொழி பேசுகிருள். உலகு முழுவதையும் தன் கொற்றக்குடை நிழலில் ஆளும் பேரரசனைக் காண வேண்டுமென்று அடம்பிடிக்கிருள்! என்று பதில் கிடைத்தது.

" அவளை உள்ளே அழைத்து வா!"

பெண் ஒருத்தி தைமூரின் முன்புவந்துநின்ருள்

சாயம் மங்கிப்போன ஆடை. அதுவும் கந்தல். அவளது கரிய நிறங்கொண்ட கூந்தல் அவிழ்ந்து மார்பகத்துக்குத் திரையிட்டு மறைத்தது. கண்களிலே சினம் பொங்கிற்று. முகம் சிவந்து தோன்றிற்று. அந்த நொண்டிச் சக்கரவர்த்தி எதிரே நின்று தன்கரத்தை நீட்டினுள். அந்தக்கை சற்றும் நடுங்காமல் உறுதியுடன் நின்றது.

"பெயசித் சுல்தானை வெற்றி கொண்டது தாங்கள் தானே?"

" ஆம். அதுமட்டுமல்ல, பெற்ற வெற்றிகள் பல. ஆனுல், வெற்றிகளில் இன்னும் எனக்கு அலுப்புத் தட்டவில்லை. பெண்ணே உனக்குஎன்ன வேண்டும்?"

"சொல்லுகிறேன். தாங்கள் என்ன செய்திருப்பினும் சரியே, தாங்கள் ஒருஆண்மகன்தான். நான் ஒரு தாய். தாங்கள் மரணத்துக்குச் சேவை புரிகின்றீர்கள். நான் வாழ்க்கைக்கு மனிதஜீவியத்துக்குச் சேவையாற்றுகிறேன். தாங்கள் எனக்கு பாவமிழைத்து விட்டீர்கள். எனவே அது குறித்து முறையிட்டுப் பரிகாரம் கோர நான் வந்திருக்கிறேன். "நீதி, வலிமையில் அடங்கியுள்ளது" என்ற கொள்கையுடையவர் என்று தங்களைப்பற்றி கூறுகின்ருர்கள். நான் அதை நம்பவில்லை. நான் ஒரு அன்னை. எனவே தாங்கள் எனக்கு நீதி வழங்கத்தான் வேண்டும்.

துணிச்சல் மிக்க இந்த சொற்ருெடர்களுக்குத் துணைபுரிந்த ஆற்றல் எது என்பதை அந்தஅரசன் உணர்ந்தான்.

"உட்கார்ந்து பேசு. நீ என்ன சொல்லுகிருய்?"

அரசர்கள் புடைசூழ்ந்து அமர்ந்திருந்த அந்த இரத்தினக்கம்பளத்தின் மீது அவர்களிடையே அவள் வசதியாக அமர்ந்து பேசத் தொடங்கினுள்.

"நான் சால்னே பிராந்தியத்தைச் சேர்ந்தவள். அது இத்தாலியில் வெகுதொலைவிலிருக்கிறது. அந்தப் பகுதிகள் தங்களுக்குத் தெரியாதவை. என் தந்தையும் கணவனும் மீனவர்கள். என் கணவர் அழகு மிக்கவர். அவர் மிக்க மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார். அவருக்கு இன்பமளித்தவள் நான் தான். எனக்கு ஒரு புதல்வன் இருந்தான். உலகிலேயே அழகு மிக்க குழந்தை."

"என் ஜஹாங்கீரைப் போல" அந்தப் போர் வீரன் முணுமுணுத்தான்.

"என் குழந்தை அழகு நிறைந்தது. மதிநுட்ப மிக்க சிறு குழந்தை அவன். அரபு நாட்டுக் கடற்கொள்ளைக்காரர்கள் எங்கள் கடற்பகுதிக்கு வந்த போது அவனுக்கு ஆறு வயதுதான். அவர்கள் என் தந்தையையும், கணவனையும் சிரைச்சேதம் செய்தனர். மற்றும் பலரும் கொலை செய்யப்பட்டார்கள். என் அருமைச் சிறுவனையும் தூக்கிச் சென்று விட்டார்கள். என் அன்புச் செல்வத்தைத் தேடி நான் கடந்த நான்காண்டுகளாக இந்த உலகமெல்லாம் சுற்றி அலைகிறேன். இப்போது அவன் தங்களிடம் இருக்கிருன். இது எனக்குத் தெரியும். பேயசித் சுல்தானுடைய ஆட்கள் அந்தக் கடற்கொள்ளையரைப் பிடித்தார்கள். தாங்கள் சுல்தானை வெற்றி கொண்டு அவரது உடைமைகளைக் கைப்பற்றியிருக்கிறீர்கள். ஆகவே என் புதல்வன் எங்கிருக்கிருன் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும். அவனை எனக்குத் திருப்பிக் கொடுங்கள்."

"அவளுக்கும் பைத்தியம்" என்று பரிகசித்துச்சிரித்தார்கள். தைமூரின நண்பர்களான அரசர்களும், பிரதானிகளும்.

ஆனுல் சமாதானத்துக்கு வெம்பகைவனுக விளங்கிய தைமூர் பேசத் தொடங்கினுன்.

"பெண்ணே! கண் காணுத அந்தப் பிரதேசத்திலிருந்து கடல்களையும், நதிகளையும், நெடுமலைகளையும் கடந்தும் இருளடந்த கானகங்களைக்கடந்தும் நீ எப்படி இங்கு வந்தாய்? வனவிலங்களிட

மிருந்தும், அவற்றின் கொடிய மனிதர்களிடமிருந்தும் நீ எப்படித் தப்பித்தாய்? திக்கற்றவர்களுக்கு ஒரே துணையாகவும், நம்பகமானதாகவும் விளங்குகின்ற ஏதோ ஒரு ஆயுதமுமில்லாமல் நீ எவ்வாறு சுற்றித் திரிய முடிந்தது? உன்மீது நான் நம்பிக்கை கொள்வதற்கு இதை நீ எனக்கு தெளிவு படுத்த வேண்டும்.''

இடையூறுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதான தாய்மையின் அன்புக்குப் போற்றி கூறுவோம். உலகனைத்தையும் ஊட்டி வளர்க்கும் அன்னையின் பெருமையைப் பாடி மகிழ்வோம். மனிதனிடத்தே பொலிவும் எழில் வளம் யாவும் பகலவனின் ஒளிக் கற்றைகளிலிருந்தும், தாழ் களிந்து ஊட்டிய பாலிலிருந்தும் பெறப்பட்டவை ஆகும். நமக்குவாழ்வின் பாசத்தை உணர்த்துவது இதுவே.

அவள் கூறினாள். ''நான் சுற்றியலைந்தபோது இடையிலே ஒரு, சமுத்திரம் என்னை எதிரிட்டது. அதிலே பல தீவுகளும், மீன்பிடி படகுகளும் இருந்தன. அன்புக்குரியவனைத் தேடிச்செல்லும்போது காற்றும் துணைபுரியும். கடற்கரையிலே பிறந்து ஆளானவர்களுக்கு நதியில் நீந்துவது ஒரு பொருட்டல்ல. மலைகளைப் பற்றியா கேட்டீர்கள்? நான் கவனிக்கவே இல்லை! அடர் வனங்கள் பல இருந்தன. காட்டுப் பன்றிகள், கரடிகள், சிங்கங்கள் எத்தனையோ எதிர்ப்பட்டன. காளைகள் பயங்கரமாகத் தலையைக் குத்தியபடி ஓடி வந்தன. சிறுத்தைப்புலிகள் இரண்டுமுறை என்னை உற்று நோக்கின. அவற்றின் கண்கள் தங்கள் கண்களைப் போன்று விளங்கின. ஆனால் விலங்குகளுக்கும் இதயமிருக்கிறது. தங்களுடன் பேசுவதுபோலவே நான் அவற்றுடனும் பேசினேன். ''நான் ஒரு தாய்'' என்று நான் கூறியதை அந்த விலங்கினங்கள் நம்பின. என்மீது கொண்ட இரக்கத்தால் அவை பெருமூச்சு விட்ட வண்ணம் தம் வழியே சென்று விட்டன. மிருகங்கள் கூடத் தமது குட்டிகளை நேசிக்கின்றன என்பதும், தமது உயிரைக் காத்துக்கொள்வதற்காகவும், சுதந்திரத்தைக் காத்துக்கொள்வதற்காகவும் மனிதனுக்கு நிகராக அவை போராட உணர்ந்துள்ளன என்பதையும் தாங்கள் அறிவீர்கள் அல்லவா?''

''நன்று சொன்னாய் பெண்ணே'' என்றான் தைமூர். ''விலங்குகள் மிக உறுதியுடன் நேசிக்கின்றன என்பதும் மனிதனைவிடக் கடுமையாக, உறுதியாகப் போராடுகின்றன என்பதும் எனக்குத் தெரியும்'' என்று அந்தச் சக்கரவர்த்தி கூறினான்.

அவள் தொடர்ந்து பேசினாள். ஆண்கள் அனைவரும் தமது அன்னையர்க்கு எப்போதும் குழந்தைகள்தான். ஒவ்வொருவருக்கும் அன்னையுண்டு. ஒவ்வொருவனும் தாயொருத்திக்கு மகனாக இருப்பவனே. சக்கரவர்த்தியே! தாங்களும் பெண்ணொருத்திக்கு மகன்தான். தாங்கள் கடவுளைக்கூட மறுத்து விடலாம். ஆனால் இதை மறுக்கமுடியாது. எனக்கு என் அன்பு மகனைத்தந்து விடுங்கள். நான் அவனை ஈன்றவள். அவனை நேசிப்பவள்.''

மோசசையும், முகமதையும், கொடியோரால் கொலையுண்ட இயேசுவையும் ஈன்றளித்த தாய்மையை வணங்குவோம்.

மகத்தான மனிதர்களை ஈன்றளிக்கும் அன்னையை வணங்குவோம். அரிஸ்டாடில், பர்தூசி, சாதி ஓமர்கயாம், இஸ்கந்தர் அந்தகரான ஹோமர் இவர்கள் அனைவரும் அவள் ஈன்ற குழந்தைகளே. அவர்கள் அனைவரும் அவளது மார்பகத்தே சுரந்த அமுதுண்டு வளர்ந்தவர்கள்தான். அவர்களது பிஞ்சுக்கரம் பற்றி உலகிற்கு அழைத்து வந்து காட்டியவள் அன்னைதான். உலகின் பெருமையனைத்தும் அன்னையரிடமிருந்து பெறப்படுவனவே.

தைமூர் - குருகான் நரை முதிர்ந்த நொண்டிப் புலி எண்ணில்லாத நகரங்களைப்பொடி சாம்பலாக்கிய மன்னன் - சிந்தனையில் மூழ்கினான். நீண்ட நேரம் மௌனம் நிலவியபின் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களிடம் கூறத் தொடங்கினான் :

''கடவுளின் சேகவனாகிய நான் கூறவேண்டியது இது. என் முன்னிலையில் ஒரு பெண் அமர்ந்திருக்கிறாள். இதுவரை நான் சற்றும் அறிந்திராத உணர்வுகளை இவள் என் ஆன்மாவில் கிளர்ந்தெழச் செய்திருக்கிறாள். இவள் என்னதிரே சரிசமானமாக நின்று பேசுகிறாள். அவள் இறைஞ்சவில்லை. மன்றாடவில்லை. நிர்ப்பந்தமாகக் கோருகின்றாள். இவள் ஏன் இத்தனை வலுவுடன் விளங்குகிறாள் என்பதை நான் புரிந்து கொண்டேன். அவள் நேசிக்கின்றாள். அன்பு பாவிக்கின்றாள். இவளது வாழ்வின் ஒளிப்பொறி அவளது குழந்தைதான். என்பதையும் பற்பல நூற்றாண்டுக்காலம்வரை நின்று சுடர்வீசும் ஒளிச் சோதியை அந்தச் சிறு ஒளிப்பொறி மூட்டிவைக்கும் என்பதையும் அன்பு அவளுக்கு உணர்த்தியுள்ளது.''

# வாழ்வென்னும் நாடகத்தில்...

— எம். அழகர்சாமி



மாணிக்கம் முதலில் 'இது என்ன செய்து விடும்?'' என்றுதான் நினைத்தான். ஆனால், நாள் ஆக ஆக அந்த இடம் பெருத்துக்கொண்டு வந்தது. வீக்கமாகக் காணப்பட்டதே தவிர, வலியேதுமிருக்கவில்லை. அதனால் 'இது புற்று நோய்க்கு அறிகுறியோ' வெனப்பயந்தான். டாக்டரிடம் காட்டுவதெனத் தீர்மானித்து ஆஸ்பத்திரிக்கு விரைந்தான்.

டாக்டர் சொன்ன பதிலைக் கேட்டதும், அவன் திடுக்கிட்டுப்போனான். ஏறத்தாழ, அவன் பயந்தது போலவே அது நடந்துவிட்டது. அதாவது புற்று நோய் இல்லை. எனினும் அவனுக்கு வந்துள்ளது 'இரன்யா' என்னும் குடல்வாத நோயாகும். இதற்கு 'ஆபரேஷன்' தவிர, வேறு பரிகாரம் கிடையாதெனக் கூறிவிட்டார், டாக்டர்!

அவன் மனைவி மரகதவல்லி இதைக்கேட்டதும் 'என்ன, திடீரென்று நன்றாக இருக்கும் உடம்பைக் கத்திவைத்து அறுக்கவேண்டுமென்று அந்த டாக்டர் சொல்லுகிறார்? அவருக்கு வேறெ வேலை இல்லையா?'' என்றாள்.

தனக்கு வந்துள்ள நோய்குறித்து ஏற்கெனவே தன்மனைவிக்குத் தெரிவித்திருந்தான், அவன். ஆனால் அவளும் 'இது என்னசெய்யும்? இப்படிப் பயப்படுகிறீர்கள்'' என்று அலட்சியமாகச்சொல்லி விட்டாள்.

மாணிக்கத்துக்கு எப்போதாவது படிக்கிற சில பத்திரிகை, புத்தகங்களிலிருந்து - ஒரு விஷயம் மனதில் பதிந்துவிட்டால், அது சமயத்தில் தலையெடுக்காமல்விடாது. இந்த விஷயமும் அதுமாதிரிதான் ஆயிற்று. ஒரு புத்தகத்தில், 'வலியில்லாமல் கட்டிபோல் ஏற்பட்டால் புற்றுநோய்க்கு அறிகுறியாயிருக்கலாம்' என்று படித்திருந்தான். அதன்விளைவாகத்தான் அவன் டாக்டரை அவசரமாகப் பார்க்க முடிவு செய்தது.

மனைவிக்கு மூச்சைக் கட்டிக்கொண்டு டாக்டரின் முடிவை அழுத்தமாகக்கூறினான். அவளுக்கும் பயமேற்பட்டுவிட்டது, டாக்டரின் யோசனைப்படி, அவன் பெரிய ஆஸ்பத்திரிக்கு ஆபரேஷனுக்காகப் புறப்படவேண்டியது என முடிவாயிற்று. மறுநாள் திருச்சி பெரிய ஆஸ்பத்திரியிலுள்ள இ. எஸ். ஐ. வார்டு ஒன்றிலுள்ள 'பெட்'டில் அவன் 'அட்மிஷன்' ஆனான்.

மாணிக்கத்துக்கு ஆஸ்பத்திரி வாழ்வு என்பது ஒரு புதிய அனுபவம்தான். 'இந்த இளம் வயதில் இப்படிவந்து ஆஸ்பத்திரி படுக்கையில் படுக்க நேரிட்டதே என வருந்தினான், அவன் படுக்கைக்குப் பக்கத்துப்படுக்கை, அவனுடைய தொழிற்சாலையில் வேலைபார்க்கும் ஒரு முஸ்லிம் நண்பருடையது. அவர், அவனுக்கு மிகவும் ஆறுதல் கூறினார். முதல்நாளிரவு அவனுக்குத் தூக்கமேவரவில்லை, அந்த நண்பர் மட்டுமில்லாதிருந்தால், அவன் இன்னும் அந்த 'பெட்'டில் இருந்துகொண்டிருப்பானாவென்பது சந்தேகம் தான். ஏனென்றால், இரவில் ஆஸ்பத்திரியின் சூழல் அவனுக்குப்படுபயங்கரமாயிருந்தது.

இரவில் நோயாளிகளின் வேதனைக் குரல்கள்! பரிதாபக்கூச்சல்கள்!! மரணவஸ்தையினூடே எழுகின்ற பிரசவவார்டிலிருந்து பிரசவப் பெண்கள் வேதனைதாளாது போடுகின்ற சத்தம்வேறு அவனைச் சித்திரவதை செய்தது.

அவன்வந்து இரண்டுமணி நேரத்திற்குள், மூன்று பிணங்களை அவன் கண்முன்னாலேயே தூக்கிப்போனார்கள். இதனையெல்லாம் கேட்கவும் காணவும் நேர்ந்த அவன் உள்ளத்தில் பயங்கரக் கற்பனைகள் முளைத்தன. அன்று இரவு முழுதும் அவன் தூங்கவே இல்லை.

மறுநாள், அவனது பயத்தைப்போக்க முஸ்லிம் நண்பர் வார்டிலுள்ள தனது நண்பர்களையெல்லாம் அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவன் யாவருடனும் கலகலப்பாகப்பேசிப் பழகினான். பொழுதுபோனது தெரியவில்லை. வந்து சேர்ந்து ஒருவாரமிருக்கும் ஒருநாள், ஜன்னலோரத்தில் உட்கார்ந்துகொண்டு போவோர் வருவோரைவேடிக்கைபார்த்துக்கொண்டிருந்தான் அவன். ஒரு இளம்பெண், தனது இரண்டரை வயதுக் குழந்தையைப் பின்னால் நடக்கவிட்டு விட்டு அவள் முன்னால் 'கைப்பை' நிறையப் பழங்களும் சாமான்களும் கொண்டுசென்றாள். அவள் சென்றது கணவனைப் பார்க்கவா, அல்லது தந்தை,

சகோதரனைப்பார்க்கவா என்பது அவனுக்குத் தெரியாது. ஆனால் இரண்டரை வயது குழந்தையைக்கூடக் கவனிக்காமல் அவள் ஓடிய அவசரம் தான் அவனை அவ்வாறு பார்க்கச் செய்தது.

அவளைப் பார்த்தவுடனேயே அவனுக்கு மரகதவல்லியின் நினைவு வந்துவிட்டது. அவளும் இப்படித்தான் குழந்தையைக் கவனிப்பதில் சற்று மதனமாயிருப்பாள். ஆனால், அவள் மதனமாய் இருப்பாள் என்று சொல்வதும் தப்பு. ஏனென்றால், அவனுடைய குழந்தை லோசனா படுசுட்டிக் குழந்தை! அவள் செய்யும் விஷமம் யாருக்கும் பொறுக்கமுடியாது. பத்தே மாதம் நிரம்பிய அவள், அரைக்கணம் கூடச் சும்மாயிருக்கமாட்டாள். எந்தப்பொருள் அவள் முன்னால் கிடந்தாலும் சரி, அதையெடுத்து வாயில் வைத்துவிடுவாள். அல்லது தூக்கியெறிவாள்; தரையில் மோதியடிப்பாள்.

அப்படித்தான் ஒருநாள் சின்னக் கண்ணாடியொன்றையடித்துக் கண்ணாடி உடைந்து அவள் காலில் ரத்தக் காயமேற்பட்டு விட்டது. மற்றொரு நாள், அவள் தாய், அவனுக்காக தட்டில் சாதம் கொட்டி வைத்துவிட்டுக் கைகழுவ வாசலிலுள்ள 'பைப்'புக்குச் சென்றிருந்தாள். அச்சமயம்வீட்டுக் குள்ளிருந்து "வீல்" என்ற லோசனாவின் அழுக் குரல்! ஓடிப்போய் பார்த்த மரகதவல்லியின் மனம் துடிதுடித்துப் போய்விட்டது. அங்கே, ஆவி பறக்கும் சோற்றுத்தட்டில் கையை வைத்துக் குழந்தையின் கை வெந்துபோய் விட்டதைக்கண்டாள். ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டு ஓடினாள். பின்னுமொருநாள் பித்தளைத் தவலைப் பானையொன்றில், தண்ணீர் நிரப்பி வைத்திருந்தாள். அதனைப் பிடித்துக்கொண்டு எழுந்து நிற்க முயன்றாள் லோசனா, மறு வினாடி தவலைப்பானைத் தண்ணீர் முழுவதும் அவள்மீது கொட்டிவிட்டதோடு அவள் கால்மீதே தவலைப்பானை விழுந்து கிடந்தது. குழந்தைக்கு அடிபட்டு விட்டதோ வென, அவள் பதறிப்போனாள்.

எண்ணங்களை எங்கெங்கோ அலையவிட்ட அவனுக்கு, குழந்தையைப் பாராமலிருப்பது மனத்திற்கு என்னவோபோல் தோன்றவே, தன்னை யறியாமல் கண்களில் நீர்சுரந்துவிட்டது. 'சிறைக் கைதி' போல, இந்த ஆஸ்பத்திரி வாசம் இன்னும் எத்தனை நாளைக்கு நீடிக்குமோ? குழந்தையை எப்போது பார்க்கமுடியுமோ?

அவனுக்கு அன்றுதான் ரத்தம், மலம், நீர் ஆகியவற்றைச் சோதித்ததுடன், 'எக்ஸ்ரே' யும் எடுக்கப்பட்டது. அவனுக்கு ஆபரேஷன் அடுத்த வெள்ளிக்கிழமை என்று சொல்லி விட்டார்கள். இந்த விபரத்தை அவன் தன் மனைவிக்கு கடிதமெழுதித் தெரிவித்தான்.

மரகதவல்லிக்கு அவன் எழுதிய கடிதத்தைக் கண்டதும் மனத்தில் என்னென்னவோ நினைவுகள் எழுந்தன. கணவனை ஆஸ்பத்திரிக்கு அனுப்பியதிலிருந்து அவள் மனம் ஒரு நிலையில் இல்லை. ஒன்றாகச் சேர்ந்திருக்கும்போது, இருவருக்கும் அடிக்கடி மனவருத்தங்கள் ஏற்படும். ஆனால் வெகு சீக்கிரத்திலேயே இருவரும் சமாதானமடைந்து விடுவார்கள். அவளுக்குத் தன் கணவன் பேசினாலும், அடித்தாலும், உதைத்தாலும் தன் அருகில் இருக்கவேண்டும். தன்னைவிட்டுப் பிரிந்து போய் விட்டால் ஒருநாள்கூட மனம் பொறுத்திருக்கமாட்டாள். மணமாகி பத்து ஆண்டுகளாகியிருந்தாலும் இதுதான் நிலைமை. முதன்முதலாக இப்போது தான் அவன் தன்னையும் குழந்தையையும் சேர்ந்தாற்போலப் பத்துத் தினங்களுக்கு மேலாகப் பிரிந்திருப்பது.

தவிர்க்க முடியாமல்தான், அவள் அவனை ஆஸ்பத்திரிக்கனுப்பி வைத்தாள். என்றாலும், மனம்கிடந்து தவித்தது. "ஏன் அனுப்பினோம்?" என்று.

'ஆபரேஷன்' என்பதை நினைத்தாலே அவள் உடம்பெல்லாம் நடுங்கியது. ஒரு சினிமாவில் வந்த சம்பவமொன்றை அவள் இப்போது நினைத்துக் கொண்டாள்.

நன்றாக இருந்த ஒருவருக்கு ஆபரேஷன் செய்யப்படுகிறது. ஆபரேஷன் வெற்றிதான் என்று, எல்லோரும் டாக்டர்உட்படச் சந்தோஷப்படுகிறார்கள். ஆனால் அடுத்த சிலமணி நேரத்தில் ஆபரேஷன் செய்யப்பட்டவர் கடுமையான ஜன்னி காரணமாக மடிந்துவிடுகிறார். இக்காட்சியை, அவள் ஏன் இப்போது நினைத்துக் கொண்டாள்? அவள் நெஞ்சத்தை அக்காட்சித் துளைத்தெடுத்துக் கொண்டிருந்தது. என் கணவர்க்கும் அதுபோலாகி விட்டால் என்ன செய்வது என்று பயந்தாள். துடித்தாள். மனத்தைவருத்தும் அந்நினைவிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள அவள் செய்த பெருமுயற்சிகள் யாவும் பயனற்றுப் போய்விட்டன. மீண்டும் மீண்டும் அதே எண்ணம் மனத்தில் விசுவரூபமெடுக்கவே, ஒருமுடிவுக்கு வந்தாள்.

'வெள்ளிக்கிழமை ஆபரேஷன்' வியாழக்கிழமை இரவு வண்டிக்கே அவள் பெரிய ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டாள்.

ஆபரேஷனுக்குச் சற்றுமுன்னாடிவரை மாணிக்கத்திடம் மரகதவல்லி பேசாமல் பேசினாள். அவனும் அவளுடன் பேசத்தான் செய்தான். ஆனால் ஆபரேஷன் தொடங்கி சிலமணித்துணிகளிருக்க, யாரும் அவனை நெருங்கக்கூடாதென உத்திரவிடப்பட்டது.

மரகதவல்லி கும்பிடாத தெய்வமில்லை. அவள் கண்களில் கண்ணீர் வற்றிவிட்டது. ஆனால் யாருக்கும் அவள் அழுவது தெரியவில்லை.

"ஆபரேஷன் வெற்றி" என்று அறிவிக்கப்பட்டது. அவள் ஓடோடிச்சென்று அவனைப்

பார்த்தாள். அவனே, பேச்சுமூச்சற்றுக் கிடந்தான். இன்னும் குறைந்தது இரண்டுமணி நேரமாவது ஆகுமாம் அவன் கண்விழித்துப் பேசுவதற்கு.

இரண்டுமணி நேரத்தை இரண்டு வருடங்களாகக் கருதினள், அவள். அவள் தன் கணவன் கண்விழிக்கமாட்டானுவென்று துடித்த ஒவ்வொரு துடிப்பும் அங்கிருந்தவர்களை அகம் நெகிழச்செய்துவிட்டது.

'கணவன்மீது என்னபாசம் இந்தப் பெண்ணுக்கு' என்றனர்.

டாக்டர் சொன்னபடி இரண்டுமணி நேரமும் அதற்குமேல் ஒருமணி நேரமாகியும் அவன் இன்னும் கண் திறக்கவில்லை. லேசாக மூச்சு மட்டும்தான் வந்துகொண்டிருந்தது. அவள் அழாத குறையாக டாக்டரிடம் கேட்டாள். 'இரண்டுமணி நேரத்தில் என் கணவர் கண்விழிப்பார் என்றீர்கள். மூன்றுமணி நேரமாகியும் அவர் பேசவில்லையே. கண் திறந்து பார்க்கவில்லையே' எனப் புலம்பினள்.

டாக்டர் அவனை மீண்டும் சோதித்துச்சொன்ன செய்தி, அவள் உள்ளத்தில் பாலை வார்த்தது. 'உன் கணவர்க்கு ஒரு ஆபத்துமில்லை. ஏற்கெனவே சற்று பலவீனமுள்ளவராதலால், சிறிது அதிகநேரமாகி நினைவு திரும்பலாம். அவ்வளவுதான். மற்றபடி உயிர்க்கு ஒன்றுமில்லை. அவரது இருதயம், நாடித்துடிப்பு யாவும் மிக நன்றாயிருக்கிறது' என்று கூறிச் சென்றார்.

டாக்டர் சொன்னது உண்மைதான். மீண்டும் சில நிமிடங்களில், மாணிக்கம் மெதுவாய்க் கண் விழித்தான். ஆனல் அவனால் அசையக்கூட முடியவில்லை. தன் மனைவி மகிழ்ச்சிக் கண்ணீர் நிரம்ப தன்முன் நிற்பதையுணர்ந்து புன்னகைத்தான். மெதுவாகப் பேசவும் செய்தான். அன்று மாலை அவன்நிலை மேலும் சீரடைந்ததையறிந்து, அவனுக்குத் துணையாக உறவினர் ஒருவரையேற்பாடுசெய்துவிட்டு அவள் ஊர்ப்போய்ச்சேர்ந்தாள்.

நாட்கள் உருண்டோடின.

மாணிக்கம் 'டிஜ்சார்ஜ்' ஆகி வீட்டுக்கு வந்தான். அவன் வந்ததும் வராததுமாக 'அத்தான்! அப்படியே நில்லுங்கள். நீங்கள் நல்லபடியாகி எழுந்துவந்தால்' காளிக்கு அர்ச்சனை செய்துவிட்டுத்தான் இந்த வீட்டுக்குள் அவரைக் கூட்டிவருவேன் 'என்று வேண்டிக்கொண்டிருக்கிறேன்.' என்று கூறிக்கொண்டே தேங்காய் பழம் தட்டு சகிதமாக அவள் வெளியில் வந்தாள்.

காளி அர்ச்சனை முடிந்தது.

வீடு திரும்பியதும் மரகதவல்லி சொன்னள்: 'அத்தான்! ஆபரேஷன் என்னவாகுமோவென்று நான் மிகவும் பயந்துவிட்டேன்' என்றாள்.

மாணிக்கம் சிரித்தான். 'பைத்தியக்காரி! ஒன்றும் நடக்காது. சின்ன ஆபரேஷன்தானே!' என்றான்.

'என்னமோ அத்தான் என் மனம் கேட்கவில்லை. நான் மிகவும் பயந்துதான் போனேன்' என்றாள் மீண்டும்.

'மரகதம்! நாம் பயப்படுவதால்மட்டும் ஒன்று நடக்கவேண்டுமென்றிருப்பதைத் தடுத்துவிட முடியுமா?' என்றான் அவன்.

'எனக்கென்னவோ இந்த ஆபரேஷனில் நீங்கள் பிழைத்ததற்கு, என் பிரார்த்தனையும்தான் உதவியாயிருந்திருக்கிறது என்று நினைக்கிறேன்' என்றாள்.

செல்லமாக அவள் கன்னத்தைக் கிள்ளிய அவன் 'அப்படியும்தானிருக்கட்டுமே, உன் பிரார்த்தனையும், டாக்டரின் திறமையும் ஒன்றுகலந்தே என் உயிரைக் காத்தது. மொத்தத்தில் என் வாழ்வென்ற நாடகத்தில் நடந்து முடிந்தது ஒரு உணர்ச்சிகரமான திகில்நிரம்பிய 'சஸ்பென்ஸ்' காட்சி! அந்தக்காட்சி மாறிவிட்டது. இதோ, அடுத்த காட்சி, இனிய மங்களகரமான இன்பக் காட்சி,' என்று மகிழ்ச்சியாய்க் குழந்தையை முத்தமிட்டபடிக் கூறினன். அவனது வேதாந்தப் பேச்சைக்கேட்டு மரகதவல்லியும் தன்னை மறந்து சிரித்தாள்!

# பஞ்சத்தின் கொடுங்கோலை ஒழித்துவிட முடியும்

— அந்தோனி ரேனால்ட்ஸ்



விவசாயத் துறைப் புரட்சியின் வேதனையை இந்தியா அனுபவித்து வருகிறது. இந்தத் துணைக் கண்டத்தை ஆட்டிவந்த பட்டினியின் வரலாற்றில், மாபெரும் பீகார் பஞ்சம் இறுதி அத்தியாயமாக இருந்துவிட முடியும். இன்று கானடாவில் உள்ளதைப் போன்று, பட்டினித் துன்பம் பாமர இந்தியனிடமிருந்து தூர விலகிச் சென்றுவிடும் நிலை 1970-ம் ஆண்டு மத்திவாக்கில் ஏற்பட்டு விடலாம்.

இரண்டு ஆண்டுகள், விடாப்பிடியான பருந்து ஒன்றைப் போல வறட்சி இந்தியாவைத் துரத்தி வந்தது. ஐந்து லட்சம் ரெயில் பெட்டிகள் நிறைய உணவு தானியத்தை இறக்குமதி செய்து, பஞ்சாப் பகுதிகளுக்கு விரைய வேண்டியிருந்தது. ஆனால், 4 கோடி மக்கள் உயிர் பிழைத்திருக்க வேண்டி, கப்பலிலிருந்து நேராக மக்களின் வாய்க்கு ஓர் ஓட்டப் பந்தயமே நடந்திருக்கிறது. இந்தியாவின் ஆட்சியாளரும், விஞ்ஞானிகளும் தங்களுடைய மூன்று உரிமைகள் பற்றி மீண்டுத் தீவிரமாகச் சிந்திக்கும்படிச் செய்திருக்கிறது.

இந்திய மக்களில் என்பது சதவிகிதம் பேர் நிலத்தை நம்பி வாழ்கிறார்கள். ஆனால், நாட்டு உற்பத்தியில் 45 சதவிகிதம் மட்டும்தான் அவர்கள் உற்பத்தி செய்கிறார்கள்.

வேளாண்மை சம்பந்தமாக அரசாங்கம் கொண்டிருந்த மனப்பான்மை மாற்ற வேண்டியிருந்தது. பாதுகாப்புக்கு அடுத்ததான இரண்டாவது உயர் முக்கியத்துவம் கொடுத்து உணவு உற்பத்திக்காக நிதியையும் வசதிகளையும் திரட்ட அதுஉத்தரவிட்டது.

இந்தியச் சூழ்நிலைகளுக்கு ஏற்ற வகையில், உயர் விளைச்சல் தரக்கூடிய புதிய கோதுமை, அரிசி, முதலிய உணவுதானிய ரகங்களைக்கையாளுவதில், இந்தியாவின் விவசாய ஆராய்ச்சிக் கழகங்கள், கதிரியக்க முறை உள்பட, மிக நவீன முறைகளைப் பயன்படுத்தின. பரிசோதனைப் பகுதிகளில் சோதனை நடத்தியபோது, மகசூல் மூன்று நான்கு மடங்கு அதிகரித்தது.

தனது முன்னோர்களின் வழிமுறைகளைக் கைவிட மனமில்லாதவர் என்று நீண்ட காலமாய் அவதூறாகக் கூறப்பட்டு வந்த இந்திய விவசாயி, சாதாரணமாக மற்றவர்கள் எண்ணியதைவிட அதிகமான பொதுஅறிவு உடையவராக இருக்கிறார். பட்டினி, வறட்சி ஆகியவற்றின் அடிமைப் பிடியில் அவர் வாழவில்லை.

ஆய்வுக் கூடத்தில் உருவான புதிய முறைகளைப் பயன்படுத்துவதற்கு அவர் தயாராக இருந்தார். பத்தாண்டுகளுக்கு முன்னால், ரசாயன உரங்களை இலவசமாக வழங்கினால்கூட அவற்றை ஏற்க மறுத்து வந்தார். இன்று, அவருடைய ரசயான உரத் தேவை சப்ளையைக் காட்டிலும் அதிகமாகி இருக்கிறது.

எட்டு ஆண்டுகளுக்குமுன் துவர் நிலமாகக் கிடந்த இடத்தில் ஏகரா ஒன்றுக்கு மிக அதிகப்படியான கோதுமையை விளைவித்து, டில்லிக்கு வடக்கிலுள்ள ஒரு சீக்கிய விவசாயி இந்த ஆண்டு உலக சாதனையை நிகழ்த்தினார்.

பருவ மழை, கடந்தகால தவறுதலுக்காக, இந்தக் கோடையில் பிராயச்சித்தம் செய்துவிட்டது. பீகாரில், வறட்சியால் பிளவுபட்ட நிலத்தில் இரண்டு ஆண்டுகளாக சாகுபடி நடைபெறவில்லை. இன்று அங்கு பசுமை வயல்கள் பரவிப் பொலிகின்றன. இந்த ராஜ்யத்தின் சாகுபடி நிலத்தில் 90 சதவிகிதத்தில் மீண்டும் விவசாயம் நடைபெறுகிறது. இரண்டாண்டுப் பஞ்சத்தில் இழந்த மாபெரும் மனித சக்தியையும், ஆதாரங்களையும் பார்க்கும்போது, இது குறிப்பிடத்தக்கதொரு சாதனையென்றுதான் கூறவேண்டும்.

இந்த ஆண்டு, 9.5 கோடி முதல் 10 கோடி டன்வரை இந்தியாவில் தானியம் உற்பத்தியாகியிருக்குமென மதிப்பிடப்படுகிறது. இதற்கு முந்திய, மிக அதிகமான மகசூல் அதாவது 8.9 கோடி டன் உற்பத்தி மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்பட்டது. உணவுத் துறையில் தன்னிறைவு என்ற குறிக்கோளை 1970-ல் அடைவதற்கு,

ஆண்டொன்றுக்கு 12 கோடி டன் தானியம் கிடைக்கவேண்டும்.

'விவசாயத்தில் அமெரிக்கா அல்லது ரஷ்யாவின் அனுபவத்திலிருந்து நாங்கள் கற்றுக்கொள்ளக்கூடியது ஒன்றுமில்லை. எங்களுடைய பண்ணைகள் அவர்களுடைய பண்ணைகளைப்போன்று அவ்வளவு பெரியவையாக இருக்கா. இங்கு, ஐந்து முதல் 15 ஏக்கராவரை நிலமுடைய விவசாயிகளைப் பொறுத்துத்தான் வெற்றி அமைந்திருக்கிறது. சிறிய பண்ணைகள் அதிக அளவு உற்பத்தித்தர முடியும் என்று ஜப்பானியர்கள் நிரூபித்திருக்கிறார்கள் என்று உணவு விவசாய இலாகா அதிகாரியொருவர் கூறினார்.

இன்று இந்திய விவசாயத்துறையில் இருக்கின்ற பரபரப்புக்குக் காரணம் புதிய உயர் விளைச்சல் ரக தானியங்களாகும். குள்ள ரகங்கள் என்று அழைக்கப்படும் இந்தப் பயிர்கள் மெக்ஸிகோவிலும், தைவானிலும் உருவாக்கப்பட்டவை. உள்ளூர் பயிர் வகைகளைப் பயன்படுத்தி ஏகரா ஒன்றுக்கு அரை டன்னுக்கும் குறைவான வீதத்தில் தேசிய சராசரி உற்பத்தி இருந்து வந்திருக்கிறது. சென்ற ஆண்டு விவசாயிகளுக்கு கொடுக்கப்பட்ட புதிய விதைகள் பல ஜில்லாக்களுக்கு ஏகராவுக்கு ஒன்றரை முதல் மூன்று டன் வரையில் விளைச்சல் தந்திருக்கின்றன.

ஏகராவுக்கு நான்கைந்து டன் விளைச்சல் தரக்கூடிய பயிர்கள் இன்னும் ஐந்தாண்டுகளில் உருவாகிவிடுமென ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். சூரிய சக்தியை இன்னும் இரண்டு மூன்று மடங்கு திறமையாக மாற்றும் வகையில் பயிரின் அமைப்பையே மாற்றுவதற்கான பரிசோதனைகளை அவர்கள் நடத்தி வருகிறார்கள்.

கிராமத்தில் தந்தை மகனுக்குக் கொடுத்த விதை அநேகமாக எந்த இடத்தில் நட்டாலும் வளர்ந்தது. ஆனால் புதிய விதைக்குச் சிறந்த கவனிப்புத் தேவைப்படுகிறது. குறிப்பிட்ட ஆழத்தை அதை விதைக்கவேண்டும்; பயிர் வளரும்போது குறிப்பிட்ட காலங்களில் நீர் பாய்ச்சவேண்டும்; சரியான அளவு உரமிடவேண்டும்.

இந்தியாவின் நிலத்தை 650 லட்சம் விவசாயிகள் உழுகிறார்கள். ஒன்று அல்லது இரண்டு பருவத்திலேயே புதிய விதைகளின் நுட்பத்தையெல்லாம் அவர்களில் பெரும்பாலானவர்கள் தெரிந்து நிபுணத்துவம் அடையவேண்டுமென்று எதிர்பார்ப்பது சரியன்று. புதிய விதைகள் விஷயத்தில் சரியான உற்பத்தி முறைகளைப் பயன்படுத்தாவிட்டால், பழைய முறைகளையும் விதைகளையும்கொண்டு மற்ற விவசாயிகள் பெறக்கூடியதைக் காட்டிலும் குறைவாக உற்பத்தி அமைந்துவிடக்கூடும்.

இதைத் தவிர்ப்பதற்காக, தெரிந்தெடுக்கப்பட்ட ஜில்லாக்களில் உள்ள முற்போக்கு விவசாயிகளுக்குப் புதிய விதைகள் வழங்கப்படுகின்றன. பயிர் வெற்றிகரமாக விளைவதற்கு, அவர்களுக்குத் தேவையான நுட்பஉதவி, ரசாயனஉரம், கடனுதவி ஆகியவற்றுக்குஅரசாங்கம்உத்திரவாதமளிக்கிறது.

இத்திட்டத்தின்படி, நடப்பு ஆண்டில் 160 லட்சம் ஏகராவில் சாகுபடி செய்யப்படும். 1970 வாக்கில் 3·25 கோடி ஏகரா பரப்பில் புதிய தானிய வகைகளைப் பயிரிட வேண்டுமென்று அரசாங்கம் விரும்புகிறது.

பயனற்றவை என்று எப்போதோ நிரூபணமாகிவட்டசித்தாந்தங்களைப் பின்பற்றிவருவதாக நிர்வாகம் அடிக்கடி கண்டிக்கப்படுகிறது. ஆனால், விவசாயத் துறையில், விவசாயிக்கு சித்தாந்த ரீதியில் அரசாங்கம் கடமைப் பட்டிருக்கிறது மட்டுமின்றி, உற்பத்தியை அதிகரிப்பதற்கு மிகவும் நடைமுறை சாத்தியமான வழியை அரசாங்கம் பின்பற்றி வருகிறது.

விதைப் பெருக்குப் பண்ணைகள் அமைப்பதில். பெரிய அமெரிக்க விதை பெருக்கு நிறுவனங்களுடன் ஒத்துழைப்பதற்கு தனியார் தொழில் துறைக்கு அரசாங்கம் லைசென்ஸ்கள் வழங்கியிருக்கிறது. அதே சமயத்தில், ஐந்து அரசாங்க விதைப் பண்ணைகள் நிறுவுவதற்காக 1·3 கோடி ரூபாய் சோவியத் உதவியை அரசாங்கம் வரவேற்றது.

ரசாயன உரத் தொழிலுக்கு அன்னியச் செலாவணியும், நுட்ப அறிவும் இந்தியாவுக்கு அவசரமாகத் தேவைப்படுகிறது. அதைப் பெறுவதற்காக, அரசாங்கம் வெளிநாட்டுத் தனியார் தொழில்துறையினருக்குச் சலுகைகள் வழங்கியது. சிலசோஷலிசவாதிகள் அதை எதிர்த்தார்கள். இந்த சலுகைகளைத்தொழிலதிபர்கள் மிகச் சிலர்தான் ஏற்றனர். இதன் விளைவாக, உணவில் இந்தியா தன்னிறைவு அடைந்து நீண்ட காலத்திற்குப் பின்னர்தான் ரசாயன உரங்களில் தன்னிறைவு நிலையை அமையும்.

மின்சார வசதிபெற்ற கிராமக் கிணற்றின் அருகில் நின்று பாருங்கள். இயந்திரம் இயங்கி, பூமியின் அடியிலிருந்து தண்ணீர் கொட்டும் சப்தத்தைக் கேளுங்கள். பருவ மழையையே முழுதும் நம்பிருந்த கொடுமை நிலையிலிருந்து விடுதலை பெற்ற விவசாயியின் பெரு மகிழ்ச்சியை நீங்கள் புரிந்துகொள்வீர்கள்.

கிராம மின்வசதிக்கான மின்சார அளவு இந்த ஆண்டு இருமடங்காகியுள்ளன. பீகாரில் முந்தைய 15ஆண்டுகளில் தோண்டப்பட்ட குழாய்க் கிணறு

பேசினேன், சிரித்தாள்; அணைத்தாள்; முத்தமிட்டாள்; முத்தை ஈந்த சிப்பியென என் மடியிலே வீழ்ந்தாள், கண்மூடி தூங்கிவிட்டாள்.

'சுமதி...!' அலறினேன்.

° ° °

இனி எனக்கென்ன இருக்கிறது? என்னுயிரினும் இனியவள் அவள் போன பின் எனக்கிங்கென்ன இருக்கிறது?

எழுந்தேன்; என் செல்வத்தைத் தோளில் கிடத்தி, இடுகாட்டை ஒட்டி ஓடும் ஆற்றை நோக்கி நடந்தேன்.

'சார்... சார்...'

குரல்கேட்டு நின்றேன்.

எனது மாணவ மாணவியர் சிலர் நின்றனர். என்னிடம் துக்கம் விசாரிக்க வந்திருக்கின்றனர்.

விழிகளில் கண்ணீர் துளிர்க்க, துக்கம் தொண்டையை அடைக்க நிற்கும் அந்த சின்னஞ்சிறு மலர்களைக் கண்டேன்.

அதோ, அதோ! அந்த கண்களின் பார்வையிலே என் சுமதி சிரிக்கிறாள். ஆம்; என் சுமதிதான்!

இல்லை, இல்லை. என் சுமதியின் வார்த்தைகள் நினைவுக்கு வருகின்றன.

'சுமதி! உன் வார்த்தைகளை மறந்துவிட்ட என்னை மன்னித்துவிடு கண்ணே! என்முடிவை மாற்றிக்கொண்டேனம்மா!'

'இதோ! இனி என் மாணவச் செல்வங்களுக்காக, உன் லட்சியத்திற்காக வாழ்வேன்.'

உள்ளத்தால் என் உள்ளத்திலேயே வாழ்ந்து விட்டுப்போய்விட்டவள் எனக்களித்திட்ட இன்பச் சுமை, எங்கள் அன்பின்விலை என்னைப்பார்த்து சிரித்தது.

தந்தையின் முடிவுதான் அதற்குச் சரியென பட்டதுபோலும்.

இந்த மழலையில் என் சுமதியின் குரல் கேட்பேன்; இதன் உருவிலே அவளைக் காண்பேன்.

# வாணிபக் கப்பல்களின் ஊழியர்



வாணிபக்கப்பல்களில் பணியாற்றும் கேப்டன்கள், அதிகாரிகள், கப்பலோட்டிகள் ஆகியோர் ஒருநாட்டின் வணிகக் கப்பற்படையின் ஊழியர்களாவர். கப்பல்களை இயக்குகின்ற இவர்களைப் போன்றே அந்தக் கப்பல்களும் நல்ல நிலையில் இருக்கின்றன.

சுதந்திரப் பேற்றுக்குப் பிறகு, நாட்டில் பெரிய, வளர்ச்சியுற்ற, துறைமுகங்கள் கணிசமாக அதிகரித்திருக்கின்றன. அவற்றில் வந்துசெல்லும் கப்பல்களும், கப்பல் பிராணிகள் எண்ணிக்கையும், சரக்கும் அதிகரித்து வந்துள்ளன. மிகவும் நவீன கருவிகளைப் பயன்படுத்தி, அதிக எடையுடன் கூடிய பெரிய பெரிய கப்பல்களைக் கட்டுகின்ற அளவுக்கு கப்பல்துறை தொழில்நுட்பத்திலும் ஒரு புரட்சியே ஏற்பட்டிருக்கிறது.

இந்த அபிவிருத்தியின் விளைவாக, மேலான பயிற்சி பெற்ற மாலுமிகள் இன்னும் அதிகமாகத் தேவைப்படுகிறார்கள். சுதந்திரத்திற்கு முன்னர் இந்தியாவில் அதிகாரிகளின் பயிற்சிக்காக ஒரே ஒரு ஸ்தாபனம் - "டஃப்ஃபெரின்"- தான் இருந்தது. இப்பொழுது அதிகாரிகளின் பயிற்சிக்கு மூன்றும், கப்பலோட்டிகளின் பயிற்சிக்கு மூன்றுமாக ஆறு பயிற்சி ஸ்தாபனங்கள் இருக்கின்றன.

கடல் வாணிபத்தில் ஈடுபடும் இதர நாடுகளிலுள்ள சிறந்த ஸ்தாபனங்களுக்கு இணையாக, இந்தப் பயிற்சி ஸ்தாபனங்கள் பயிற்சி வசதிகளை வழங்கி வருகின்றன. வாணிபக் கப்பல்களின் ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கும் திட்டங்களுக்கு நிதி உதவி முழுவதையும் அரசாங்கமே நல்கி வருகிறது.

'டஃப்ஃபெரின்' என்னும் பயிற்சிக் கப்பல் 1967-ல் அமைக்கப்பட்டது. நம் நாட்டிலேயே இதுதான் மிகப்பழமையான பயிற்சிக் கப்பலாகும். அதற்கு பதிலாக வேறொரு பயிற்சிக் கப்பலை அமைப்பது பற்றி அரசாங்கம் தற்போது ஆலோசித்து வருகிறது. பம்பாய் மஸ்கான் பயரிலிருந்து சுமார் 3 மைல் தொலைவில் இந்தக் கப்பல் நிறுத்தப்பட்டிருக்கிறது. அனைத்திந்திய போட்டிப் பரீட்சையொன்று நடத்தி அதன் மூலம் ஆண்டு தோறும் 90 கேடெட்டுகளைப் பயிற்சிக்காக டஃப்ஃபெரின் எடுத்துக்கொள்கிறது.

இரண்டு ஆண்டுப் பயிற்சிக் காலத்தில், கேடெட்டுகள் கப்பலிலேயே தங்கியிருக்கிறார்கள். பின்னர் வெளிநாடுகளுக்குச் செல்லும் கப்பல்களில் மூன்று ஆண்டுகள் அப்ரன்டிஸ்வாகப் பணியாற்றுவதற்கு அவர்கள் அனுப்பப்படுகிறார்கள். 'டஃப்ஃபெரின்' இதுவரையில் 2,100 அதிகாரிகளுக்குப் பயிற்சி அளித்திருக்கிறது. இவர்களில் பர்மா, இலங்கை, மலேசியா ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள்.

வணிகக் கப்பல்துறை எஞ்சினியரிங் பயிற்சி அலுவலகம் கல்கத்தாவில் 1949-ல் அமைக்கப்பட்டது. பம்பாயில் அதன் கிளை அமைக்கப்பட்டது. மீண்டும் ஒரு சுமதியை இங்கு படைப்பேன்.

ஆற்றைத் திரும்பி பார்க்கிறேன்.

தன்னுள் வாழும் மீனை, கரையிலிருக்கும் நாரைக் கவ்விக்கொண்டது என்பதற்காக ஆற்றின் ஓட்டம் நிற்கவில்லையே! அதன் லட்சியம் கடலில் கலப்புதுதான். ஆறு ஓடிக்கொண்டேயிருக்கிறது.

நானும் வாழ்வேன் என் இலட்சியத்திற்காக! ஆண்டுதோறும் நூறு எஞ்சினியர்களுக்கு அதில் பயிற்சி அளிக்கப்படுகிறது. நான்கு ஆண்டுகள் நடக்கும் இந்த வகுப்பிற்கு போட்டிப் பரீட்சை ஒன்றின் மூலம் அவர்கள் தெரிந்தெடுக்கப்படுகிறார்கள். கல்கத்தாவிலும் பம்பாயிலுமுள்ள வணிகக் கப்பல்துறை தொழிற்கூடங்களில் அவர்கள் முதல் மூன்று ஆண்டுகள் அப்ரண்டிஸ்களாக வேலை பார்க்கிறார்கள். பயிற்சி அலுவலகத்தில் அவர்களுக்கு நடைமுறை போதனையும் அளிக்கப்படுகிறது. இறுதி ஆண்டில், கல்கத்தாவிலுள்ள வணிகக் கப்பல்துறை எஞ்சினியரிங் பயிற்சிக் கல்லூரியில் அவர்களுக்குத் தீவிர பயிற்சி தரப்படுகிறது. இதுவரையில் 1015 பேர் இங்கு பயிற்சி பெற்றிருக்கிறார்.

1948-ஆம் ஆண்டில், நிறுவப்பட்ட இந்தக் கல்லூரி, கப்பல்துறை, எஞ்சினியரிங் ஆகியவற்றில் போதனை நடத்துகிறது. இந்தியாவிலேயே இத்துறையில், இதுதான் முதலாவது கல்லூரியாகும். எல்லா நாட்டவரும் இதில் சேரலாம்.

1967 இறுதி வரையில் சுமார் 9 ஆயிரம் பேருக்கு இந்தக்கல்லூரி பயிற்சி அளித்திருக்கிறது.

இவர்களில் 320 பேர் பிரிட்டன், பர்மா, சைஞு, இலங்கை ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள்.

ராடார் கண்காணிப்பு பயிற்சி வகுப்பு, விசேஷ சிக்னல் வகுப்புகளும் இங்கு நடத்தப்படுகின்றன. இந்தக்கல்லூரி, படகுப் பயிற்சிப் பள்ளியொன்றையும் நடத்தி வருகிறது. இதில் 1967 வரையில் சுமார் 5000 மாலுமிகள் பயிற்சி பெற்றிருக்கிருர்கள்.

இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்பு, கப்பலோட்டிகள் எவ்விதமான பயிற்சியுமின்றிதான் கப்பல்களில் பணியாற்றச் சென்றனர். உயர்ந்த திறமையுடன் பணியாற்றுவது என்பது அவரவருடைய சொந்த முயற்சியையும், ஆர்வத்தையும் பொறுத்தாகவிருக்கிறது. கப்பல்களை இயக்குவதில் பெரும் அபிவிருத்தி ஏற்பட்டு, அதிகத் திறமை உள்ளவர்கள் தாம் வணிகக் கப்பல்களில் பணியாற்றமுடியும் என்ற நிலை ஏற்பட்டது. பயிற்சி பெருதவர்களைப் பயன்படுத்துவதென்பது இயலாத ஒன்ருக ஆகிவிட்டது.

தற்போது கப்பலோட்டிகளுக்குப் பயிற்சி அளிப்பதற்காக மூன்றுபயிற்சிக் கழகங்கள் இயங்கி வருகின்றன. அவை யாவன: விசாகையில் டி. எஸ். "மேகலா"; கல்கத்தாவில் டி. எஸ். "பாத்ரா"; குஜராத்தில் நல்லகிரியில் டி. எஸ். "நௌலக்ஷி". இவை மூன்றும் சேர்ந்து ஒவ்வொரு ஆண்டிலும் சுமார் 1,260 பேருக்குப் பயிற்சி அளிக்கக்கூடிய வசதி பெற்றிருக்கின்றன. இந்தப் பயிற்சி வகுப்பு நான்கு மாதங்கள் நடைபெறும். 1967 டிசம்பர் வரையில், 10,530 டெக்ரேட்டிங்குகளுக்கும், 9845 எஞ்சின் அறை ரேட்டிங்குகளுக்கும், 111 சலூன் ரேட்டிங்குகளுக்கும், இந்தக் கழகங்கள் பயிற்சி அளித்திருக்கின்றன.

அண்மையில், உயர்தர மாலுமிகளுக்ப் பயிற்சியளிப்பதற்காக பரீட்சார்த்த திட்டமொன்று கல்கத்தாவில் டி. எஸ். 'பாத்ரா'வில் துவக்கப்பட்டிருக்கிறது.

வணிகக் கப்பல் படையினரின் பயிற்சியின் எல்லா அம்சங்களையும் ஒருங்கிணைப்பதற்காக இந்த போர்டு 1959-ல் ஒரு ஆலோசனை சபையாக அமைக்கப்பட்டது. போக்குவரத்து-கப்பல்துறை இலாகா மந்திரியின் தலைமையிலான இந்த போர்டில் இத்துறையுடன் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் இருக்கிருர்கள். திறமையான, கடமைப்பற்றுடன் பணியாற்றக் கூடிய வணிகக் கப்பற்படையை உருவாக்குவது தான் இந்த போர்டின் தலையாய லட்சியமாகும்.

ஆதி முதல் எப்போதும் இருந்து வந்தது போலவே இப்போதும் எங்கள் குறிக்கோள் நாடுகள் விடுதலை பெற்றுச் சரிநிகர் சமானமாக வாழ வேண்டும் என்பதேயாகும். இந்த நாடு புரட்சியில் பிறந்தது, சுதந்திரத்தில் வளர்ந்தது. ஒதுங்கும் எண்ணம் எங்களுக்கு இல்லை.

— ஜான் எஃப் கென்னடி



# தமிழில் ஆராய்ச்சி

— சாலை இளந்திரையன்



ஒரு சமுதாயத்தின் இலக்கிய வரலாறு, பெரும்பாலும், அச்சமூகத்தினுடைய வாழ்க்கை வரலாற்றின் எதிரொளியும் எதிரொலியுமே. மரமானது மேட்டு நிலத்திலே நின்றாலும், தன்னைச் சுற்றி எட்டிய மட்டும் உள்ள அகலத்திலும் ஆழத்திலும் தன்வேர்களை அனுப்பி, அங்கெல்லாமிருந்து பெற்ற வளத்தினாலேயே வளர்கிறது. இலக்கிய ஆசிரியன் ஒருதனி மனிதனேயானாலும், ஒருவகையில் தனது சமூகத்தினரிடமிருந்து அவன் தனித்தே வாழ்கிறானென்றாலும், அவன் வாழும் சமூகமே, தன் பல அம்சங்களாலும் அவனுடைய படைப்புக்கு ஊட்டமளிக்கிறது. அளிக்கவே, எந்த ஒரு இலக்கியமும், ஏதாவது ஒருவகையில் தனது சமகாலச் சமுதாயத்தைப் பிரதிபலிப்பதாகவே உருவாகிறது.

அரசியல் வரலாறு என்று இப்போது நாம் படிக்கின்ற பாடம், சமுதாயங்களின் அவ்வக் காலத்திய புறத்தோற்றங்களை மட்டுமே நமக்குக் காட்டுகிறது. நாம் படிக்கும் புறத்தோற்றங்களின் மாறுதலுக்குக் காரணமாக அமைவது அவ்வச் சமுதாயங்களின் அகவாழ்க்கை. அதில் ஏற்படும் மாறுதலே சமுதாய வாழ்வின் நிலைபேறுகளையோ மாற்றங்களையோ நிர்ணயிக்கிறது. இந்த அகமாறுதலை இலக்கியம் நமக்காக அவ்வப்போது பதிவுசெய்து வைக்கிறது. எனவே, ஒரு சமூகம் தனது எதிர்கால நல்வாழ்வுக்குத் திட்டங்கள் வகுக்கு முன், அதன் இறந்தகால அகவாழ்வை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். இதைத் தெரிந்து கொள்ளவே இலக்கியஆராய்ச்சி பயன்பட வேண்டும்.

தமிழகம் என்னும் மக்கட்சமுதாயம் நீண்ட வாழ்க்கை வரலாறு உடையது; நீண்ட இலக்கிய வரலாறும் உடையது. பல்வேறு காரணங்களால், தமிழக அரசியல் வரலாறே இன்னும் சரிவர வரையப்படாமல் கிடக்கிறது. இலக்கிய வரலாறு பற்றியோ, சொல்லவே வேண்டுவதில்லை; அன்று தொட்டு இன்றுவரை உள்ள நீண்ட இலக்கியங்களை, தமிழ்ச்சமூகத்தின் பல்லாயிரக் கணக்கான ஆண்டு நெடுவரலாற்று மேடு பள்ளங்களின் பலவேறு பிரதிபலிப்புக்களை, ஒன்றாகக் குவித்துப் போட்டுக் கொண்டு ஒரு சிலர் அதைச் சுற்றிக் காவல் இருக்கிறார்கள். அந்தப் பெரிய அம்பாரத்தை வகைப்படுத்தவோ, வகுத்துப் பார்த்து அதன் ஒவ்வொரு மணியின் தரத்தையும் மதிப்பிடவோ தமிழறிஞரானோர் திட்டமிட்டு முயலவே இல்லை. எனவே அந்த மணியின் ஒளி இன்றையத் தமிழ்ச் சமூகத்துக்கு எட்டவே இல்லை.

'நாம் யார்? மனித சமுதாயத்தில் நமது தரம் யாது? எதிர்காலத்தில் நாம் எவ்வாறு இருக்க வேண்டுமென்று விரும்புகிறோம்? அதற்கு நமக்குள்ள பாரம்பரியத் தகுதி என்ன? நம்மை அறியாமல் நம்முள் ஊடுவி நிற்கும் குறையும் நிறையும் எவை எவை?' இவை போன்ற கேள்விகளை எழுப்பாமல் எந்தக் கூட்டத்தினரும் சிறப்படைய முடியாது. ஆயினும், ஏனோ, தமிழர்கள் மட்டும் இத்தகைய சிந்தனைகளை எழும்பும் எண்ணமே இல்லாமல், மேற்போக்கான சில சம்பிரதாயப் பழக்கவழக்கங்களையே வாழ்வு என்று கருதிக் கொண்டு இருந்து முடிந்து போகிறார்கள்.

இந்த இருட்டைக் கிழித்து, தமிழர்களைச் சூழ்ந்துள்ள அசமந்தப் புற்றை உடைத்து, அவர்களை விடுவிக்க வேண்டிய பணியே இப்போது தமிழகத்தில் நடைபெற வேண்டிய முதற்பணி.

மூவாயிர ஆண்டுத் தமிழ் இலக்கியங்களை ஒன்றாகக் குவித்துப் போட்டுக் கொண்டிருக்கும் வரை, அதைப் பார்க்கும் யாருக்கும் அதன் புகழை மட்டுமே பாடத் தோன்றும். மிகப் பெரியதாக இருப்பது வியப்புணர்ச்சியை ஏற்படுத்துவது இயல்புதானே? ஆனால் நமக்கு வேண்டியது இந்த ஆச்சரியக் குறி அல்ல; அதை விலக்கி உள்ளே சென்று ஒவ்வொன்றையும் விழித்துப் பார்க்கும் கேள்விக்குறியே நமக்கு இப்போது தேவை.

தமிழ் இலக்கியம் மொத்தமாகக் கிடப்பதால் அதன் பெரும்பகுதி நமக்குத் தெரியவில்லை. அகம், புறம், பக்தி, காவியம், புராணம், பிரபந்தம், உரைநடை என்ற முறையில், ஒரு பெரும்போக்கான காட்சியே நமக்குக் கிடைக்கிறது. இவைகளுக்குள்ளே, இவைகளை இலக்கியத்தில் ஏற்றிய சமூக அகமாறுதல்கள் எவைஎவை என்பது நமக்கு இன்று தெரியவில்லை. இதைத் தெரிந்துகொள்ளும் போதுதான் தமிழர்கள் தங்கள் வரலாற்றை முறையாகவும் முழுமையாகவும் தெரிந்துகொண்டவராவார்கள்.

இந்த நோக்கம் நிறைவேற, முக்கியமான சில பணிகள் உடனடியாக நடந்தாக வேண்டும். முதலாவது, மேற்போக்கான சில பெரிய வேறுபாடுகளை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் இலக்கியத்தைச் சில பிரிவுகளாகப் பகுக்க வேண்டும். சங்கத் தமிழ், இடைக்காலத் தமிழ், தற்காலத் தமிழ் என்று பிரிக்கலாம்;

மற்றவர்களை அநீதியாய்
நடத்தாதீர்கள்;
நீங்களும் அநீதியாய்
நடத்தப்பட மாட்டீர்கள்

— முகமது நபி






அல்லது சங்கத்தமிழ், நீதித்தமிழ், பக்தித்தமிழ், காவியத்தமிழ், புராணத்தமிழ், பிரபந்தத்தமிழ், தழுவல் தமிழ், உரைநடைத்தமிழ் என்று பிரிக்கலாம். இப்படி ஏதாவது ஒரு வகையில் பிரித்து, ஒவ்வொன்றின் பல்வேறு அம்சங்களையும் நோக்குவதால் நமக்கு எத்தனையோ புதிய உண்மைகள், நம் இலக்கியத்தைப் பற்றி இதுவரை நாம் சிந்தித்தே இராத உண்மைகளெல்லாம் புலப்படக்கூடும். அவைகள் நமது சமுதாய வாழ்வைப் பற்றிய புதுப்புதிய உண்மைகளையும் நமக்கு விளக்கக் கூடும்.

சான்றாக, 'ஒருகாலத்தில் அகமும் புறமுமாக இருந்த தமிழ்இலக்கியம், அடுத்தகாலக்கட்டத்தில், புறத்தின் ஒரே ஒரு கூறாகிய நீதியின் பக்கமாகச் சாய்ந்தது ஏன்? நீதிப்பாடல்களாகச் சென்ற தமிழ் இலக்கியம், திடீரெனப் பக்திப்பாடலாகப் பொங்கியதற்குக் காரணமாக அமைந்த சமுதாய அகமாறுதல்கள் என்னென்ன? உயர்மனிதனாக வான்மீகத்தில் வளரும் இராமன், தமிழில் உருவாகும்போது கடவுளாகவே மாறிவிட்டது ஏன்?...' இந்த மாறுதல்களுக்கு ஒருவரோ சிலரோவாகிய இலக்கிய ஆசிரியர்கள் மட்டுமே காரணமாக இருக்கமுடியாது; சமுதாய அகவாழ்வே (அல்லது அப்படியானதொரு தோற்றமே) இலக்கிய ஆக்கத்தில் இத்த மாறுதல்களை ஏற்படுத்தியிருக்க வேண்டும்.

தவிர, சங்க இலக்கியம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் படைக்கப்பட்ட இலக்கியமல்ல; நீண்டபல நூற்றாண்டுகளாக அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பாடப்பட்ட பாடல்களின் தொகுதி அது. அதில் விவரிக்கப்படும் சமுதாயம் ஒரே மாதிரி ஆனதன்று; பல்வேறு காலக்கட்ட மாறுபட்ட சமுதாயநிலைகளைக் காட்டுகிறது சங்க இலக்கியம். கி.மு. பதினைந்தாம் நூற்றாண்டுப் பாடலும் சங்க இலக்கியம்; கி.பி. இரண்டாம் நூற்றாண்டுப் பாடலும், இன்று நம்மைப் பொறுத்த அளவில் சங்கஇலக்கியமே. இந்த மொத்தத்தைவைத்துக்கொண்டே பலர், சங்ககாலச் சமுதாயம் பழக்கவழக்கம் முதலியவை பற்றிக் கருத்துத் தெரிவிக்கின்றார்கள். இப்பாடல்களுள் மிக முந்தியனவும் மிகப் பிந்தியனவும் உண்டு என்பதையோ, அவை இரண்டும் தமிழ்ச்சமுதாய வரலாற்றில் வெவ்வேறுபட்ட நிலைகளைச் சித்தரிக்கின்றன என்பதையோ அவர்கள் உணர்வதே இல்லை. அவ்வளவு ஏன்? இத்தப் பாடல்கள் தொகுக்கப்பட்ட மிகப் பிற்காலத்தில் பாடிச் சேர்த்த கடவுள் வாழ்த்துக்களையும் சங்க இலக்கியம் என்று கொண்டே கருத்துத் தெரிவிப்போரும் இருக்கிறார்கள்....

சிறிது காலத்திற்கு முன்வரை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் அனைத்துமே சங்கஇலக்கியம் என்றுகொள்ளப்பட்டன. இப்போதுதான், ஒரு வகையான ஆராய்ச்சியின் பின், எட்டுத்தொகையிலும் பத்துப் பாட்டிலும் ஒரு பகுதியும், பதினெண்கீழ்க் கணக்கில் பல நூல்களும் மிகப் பிற்பட்ட காலத்தவையாக இருக்க வேண்டும் என்ற கருத்து ஏற்பட்டுள்ளது. இதைஇன்னும் தெளிவாக விரிவாக ஆராய்ந்து வகைப்படுத்தினால்தான், "உண்மையிலேயே மூத்த தமிழ் எது, அதன் பிற்கால வளர்ச்சி எது?" என்பன தெளிவாகும்.

இதுபோலவே, பக்திக்காலத்தின் பல்வேறு நூல்களும் சமுதாயத்தின் பல்வேறு நிலையினருக்காக உருவாகியிருக்க வேண்டும். அந்த நிலைகள் எவை? அவற்றுக்கு மூலமான வரலாறு யாது? என்பவற்றை அறிய வேண்டுமானால், அந்த இலக்கியங்களை நுணித்து ஆராய வேண்டும்.

இத்தகைய ஆராய்ச்சி வளர்வதற்கு ஒரேவழி, தமிழ் இலக்கியத்தைக் காலவாரியாகவும் கருத்துவாரியாகவும் வெவ்வேறுதுறைகளாகப் பிரிக்க வேண்டும். அவ்வத் துறைகளின் சிறப்பு இயல்புகளைக் கண்டறியத்தக்க தனிப்பயிற்சி (Specialisation) வல்லவராக அறிஞர்களை உருவாக்க வேண்டும். அதற்குத் துணையான வரலாறு, சமுதாயஇயல் முதலியவற்றிலும் அவர்களுக்குச் சிறப்புப் பயிற்சியளிக்க வேண்டும். இந்த ஆய்வாளர்அணி இடைவற்றிப் போகாதபடி, இந்த வகையிலேயே தமிழ் இலக்கியப் பயிற்சி நடைபெறவும் வகைசெய்ய வேண்டும். தூர்ந்து கிடக்கும் நமது நெடுவரலாற்றுக்கிணறு ஊற்றுக்கள் பீரிட்டடித்து நமது எதிர்காலத்தை வளப்படுத்த இவை எல்லாம் விரைவிலேயே செய்யப்படுதல் வேண்டும். *

# ஆசிரியரின் ஆத்மா

★

அந்தக் குக்கிராமத்தின் குடிமக்களான விவசாயிகள் தங்கள் ஊர் 'வாத்தியாரையா' நோய்வாய்ப்பட்டுக் கிடப்பதையும் திடீரென்று ஒருநாள் அவர் சிவலோக பதவியடைந்து தங்களை வேதனை கலந்த வியப்பில் ஆழ்த்திவிடக்கூடும் என்பதையும் நெடுங்காலத்துக்கு முன்னரே நன்குணர்ந்திருந்தார்கள்.

'வாத்தியாரையாவை' தீராத வியாதியொன்று பீடித்துவிட்டிருந்தது. அதன் விளைவாக நாளுக்கு நாள் அவர் உடம்பு உருகிக்கொண்டே வந்தது; முகமும் கறுத்துகொண்டே வந்தது. ஆனால் அவரது கண்கள் மட்டும் நாளுக்கு நாள் ஒளியேறி தீச்சுடர்களெனத் திகழலாயின. அவரது எலும் பெடுத்துப்போன மார்புக் கூட்டினுள் வறட்டு இருமல் நிரந்தரமாகக் குடியேறிவிட்டிருந்தது. நுரையீரல்களைக் கிழித்து அறுத்துக்கொண்டு அந்த இருமல் அடிக்கடி மார்புக்கூட்டிலிருந்து வெளிக் கிளம்பிவரும். அப்படியிருந்தும் 'வாத்தியாரையா' தமது பள்ளிக்கூடத்துக்கு தட்டுத்தடுமாறிக்கொண்டு போய் வந்துகொண்டுதானிருந்தார். ஒவ்வொரு நாளும் சாயங்கால வேளைகளில் அவர் அடிக்கொரு தடவை நின்று நிதானித்து நீண்டநேரம் இருமிதீர்த்தபடி பள்ளியிலிருந்து திரும்பி வருவதை கிராமவாசிகள் சோகத்துடன் கவனித்து வந்தனர்.

'வாத்தியாரையாவைப் பீடித்திருக்கிற இருமல் ஆட்கொல்லி இருமல் - வெகு சீக்கிரமே இவருக்கு நாம் பாடை கட்டவேண்டியதுதான்' அன்று கிராமவாசிகள் தங்களுக்குள் ரகசியம் பேசிக்கொள்வது வாடிக்கையாகிவிட்டது.

கடைசியில் 'வாத்தியாரையா'வின் பள்ளிக்கூடமே அவருக்கு எமனாகிவிட்டது. அங்கே பிள்ளைகளிடம் மாரடித்துக்கொண்டதால்தானே அவருக்கு இந்தப் பொல்லாத இருமல் வந்து தொலைத்தது! வாத்தியாரையாவின் பள்ளிக்கூடம் கிராமாந்தரத்துப் பழங்குடி ஒன்றில் அமைந்திருந்தது. குறுகலான அந்த ஒட்டைக் குடிலின் தரையும் மேடும் பள்ளமுமாய் சீரற்றுக் கிடக்கும். காற்று போய்வர அந்தக் குடிலில் நல்ல வேளையாய் சில சாளரங்கள் இருந்தன. ஆனால் சாளரங்களா அவை? வெறும் புரு அடையும் பொந்துகள்தான்! வகுப்பறைகள் அனைத்தும் அழுக்கடைந்து தூசும் தும்புமாய்க் காட்சியளிக்கும். அவற்றில் கொட்டடியில் அடைத்துவைத்த ஆடுகள்மாதிரி பிள்ளைகள் நெருக்கியடித்துக் கொண்டுஉட்கார்ந்திருப்பார்கள். வாத்தியாரையா இங்கேதான் நீண்டகாலமாக தமது 'தொழிலை' நடத்தி வருகிறார். அதன் விளைவாகத்தான் ஆட்கொல்லி இருமல் அவரது மார்புக்கூட்டினுள் புகுந்து நாளொரு மேனியும் பொழுது ஒரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது.

கடைசியில் கிராமவாசிகள் எதிர்பார்த்தது போலவே ஒருநாள் மாலையில் பள்ளியிலிருந்து வீடு திரும்பியதும் களைப்புடன் படுத்துக்கொண்டவர் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் செத்துப் போனார். ஓ, இது ஒன்றும் புதுமை அல்லதான்: அனைவருமே ஒருநாள் போய்ச்சேரவேண்டியவர்கள்தானே!

விறைத்துப்போன மெலிந்த உடற்கூட்டிலிருந்து வெளியேறிய வாத்தியாரையாவின் ஆத்மா எமதூதர்களின் வருகைக்காகக் காத்திருந்தது. அவர் போகவேண்டிய இடம் சொர்க்கமா அல்லது நரகமா என்பது அவர்கள் வந்தபிறகுதானே தெரியும். அவராக எங்கேயும் போய்விட முடியாதே!

வாத்தியாரையாவின் ஆத்மாதான் அதுகாறும் குடியிருந்த உடலை உற்றுப் பார்த்தது. மறுபடியும் அதனுள் புகுந்துகொள்வதால் அப்படியொன்றும் அப்படியொன்றும் இன்பம் கிடைத்துவிடாது என்பதையும் உணர்ந்துகொண்டது! மீண்டும் அந்த உடம்புக்குள் புகுந்துகொள்வதால் என்ன லாபம்? மறுபடியும் லொங்கு லொங்கு என்று பள்ளிக்கூடத்துக்குப் போய் பிள்ளைகளுடன் மாரடிக்கவேண்டும். கிடைக்கிற வருமானம் போதாமல் வருவதை வைத்து வாழ்க்கை நடத்தவும் தெரியாமல் கடன்காரர்களுக்கு பதில் சொல்லிக்கொண்டு நிற்கவேண்டும். குளிரிலும் மழையிலும் நோயின்வாதை தீவிரமாகி அல்லுற வேண்டும்... சீச்சி, இந்த உடம்புக்குள் மீண்டும் போய் புகுவதா? வாத்தியாரையாவின் ஆத்மாவுக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது.

'இதென்ன அநியாயம்!. அலங்கோலமாய்க் கிடக்கிற இந்தக் கேடு கெட்ட உடலல்லவா என்னை இந்த உலக வாழ்க்கையின் அல்லல்களில் இத்தனை காலம் உழல வைத்தது! இன்பமயமான அனுபவங்களையும் உன்னதமான லட்சியங்களையும் வெறும் கனவுகளில் மட்டுமே நான் உணரும்படி நேர்ந்தது இந்த உடலால்தான். இந்த உடம்புக்குள் இருந்தபோதுதான் இங்கிருந்து வெளியேறி வேறொரு உலகுக்குச் செல்லப்போவதுபற்றி

அடிக்கடி நான் கனவுகண்டுகொண்டிருந்தேன். இப்பொழுது உண்மையாக அப்படியொரு சந்தர்ப்பம் வாய்த்துவிட்டது. உம், நான் போகப் போகிற அந்த உலகின் நிலவரம் எப்படி இருக்கிறதோ, பார்க்கலாம்! அங்கேயும் ஏதாவது தொல்லைகள் இருந்தால் அதைப்பற்றி இங்கேயிருக்கிறபத்திரிகைகளுக்கெல்லாம் 'ஆசிரியருக்கு கடிதம்' என்று எழுதிப்போடவேண்டியதுதான் என்று வாத்தியாரையாவின் ஆத்மா எண்ணமிட்டது.

அப்போது வாத்தியாரையாவைத் தேடிக் கொண்டு இரண்டு உருவங்கள் வான்வழியே வந்திறங்கின. அவைகளில் ஒன்று தேவதை; மற்றொன்று சாத்தான். வாத்தியாரையாவின் ஆத்மாவை அழைத்துச் செல்ல அவையிரண்டும் போட்டி போட்டுக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தன. "மன்னித்துக் கொள் நண்பா. நாங்கள் வருவதற்கு சிறிது நாழியாகிவிட்டது. அதனால் நீஇங்கே தன்னந்தனியாக தவித்துக் நிற்கும்படி நேர்ந்துவிட்டது... காலந்தாழ்த்தி வந்ததற்காக என்மீது கோபித்துக் கொண்டுவிடாதே..." என்றது சாத்தான். பிறகு சிரித்துக்கொண்டே "ஆனால் கால தாமதத்தை நீ பொருட்படுத்தமாட்டாய் என்று நினைக்கிறேன். நீதான்! வாத்தியாரையாவாக இருந்த ஆத்மா ஆயிற்றே! வாத்தியாரையாக்களுக்கு வாழ்க்கையில் காத்திருந்தே பழக்கந்தானே! பெரிய அதிகாரிகளாக இருந்த ஆத்மாக்களுக்குத்தான் நாங்கள் வருவதற்கு சற்று தாமதமாகிவிட்டால் மூக்குக்கு மேல் கோபம் வந்துவிடும்! ஆனால், வாத்தியார்களுக்கு கோபமே வராது; பாவம் பரம சாதுக்கள்" என்று கூறியவாறு வாத்தியாரையாவின் ஆன்மாவினுடைய கரங்களை வாஞ்சையுடன் பற்றிக் கொண்டது. சாத்தான் தன்னிடம் குழைவாகப் பேசிப் பழகுவதைக் கேட்டதும் வாத்தியாரையாவின் ஆத்மாவுக்கு உச்சி குளிர்ந்துவிட்டது.

"சரி, போகலாமா?" என்று மிகவும் சுவாதீனமாகவாத்தியாரையாவின் ஆத்மாவைதோளில் கைபோட்டு இழுத்தது சாத்தான்.

சாத்தானின் மாய்மாலத்தைக் கண்டு வாத்தியாரையாவின் ஆத்மா மயங்கிவிட்டது. "ஆகா, எவ்வளவு அருமையான ஆள் இந்த சாத்தான்! இதைப்போய் கெட்டது கொடியது என்றெல்லாம் கதை கட்டிக்கொண்டிருக்கிறார்களே! என்று எண்ணியவாறு சாத்தானுடன் கிளம்ப ஆயத்தமாயிற்று. ஆனால் தேவதை அவர்களை வழிமறித்தது. "இரு. இந்த எத்தனின் பேச்சில் ஏமாந்துவிடாதே; நீ நல்ல ஆத்மா!" என்று வாத்தியாரையாவின் ஆத்மாவை தடுத்து நிறுத்தியது. வாத்தியாரையாவின் ஆத்மா தேவதையை ஏற இறங்கப் பார்த்தது. பிறகு "யார் நீ" நீ என்னை எங்கே அழைத்துக் கொண்டு போக விரும்புகிறாய்? அந்த இடம் எப்படிபட்டது? அதைச் சொல்லு முதலில்" என்றது.

"உன்னை நான் அழைத்துக்கொண்டு போக விரும்பும் இடம் சொர்க்கம். அங்கே பாலும்தேனும் ஆறாய்ப் பெருக்கெடுத்துப் பாய்ந்து கொண்டிருக்கும். உலக வாழ்க்கையில் நீ மிகவும் அல்லல்களை அனுபவித்திருக்கிறாய்; எவருக்கும் எந்தவிதமான தீங்கையும் நீ செய்ததும் இல்லை; எனவே உனக்கு ஏற்ற இடம் சொர்க்கம்தான். அங்கே துன்பம் என்பதே இருக்காது. எந்த ஆத்மாவுக்கும் அங்கு எந்தவிதமான சங்கடமும் இருக்காது. மறைவான ரகசியங்கள் எதுவும் அங்கு கிடையாது" என்று விளக்கியது தேவதை.

அதைக் கேட்டதும் சாத்தான் விழுந்துவிழுந்து சிரித்தது. "பாலும் தேனும் ஓடுமாம்! வாத்தியாரையா, கேட்டீரா கதையை? ஆத்மாவின் ஆனந்தம் பாலிலும் தேனிலுமா இருக்கிறது. அப்படியானால் இந்தமண்ணுலகத்திலேயே பாலும்தேனும் கிடைக்காமலா இருக்கின்றன? ஆத்மாவுக்குத் தேவையானது சுதந்திரம்தான். அந்த சுதந்திரம் சொர்க்கத்தில் கிடைக்காது. மர்மங்கள், அவிழ்க்க முடியாத புதிர்கள், எதுவும் புலனாகாத இருட்டு இதெல்லாம்தான் ஆத்மாவின் சிந்தனைப் பசிக்கு ஏற்ற உணவுகள். அவையெல்லாம் நான் கூட்டிச் செல்லும் இடத்தில்தான் கிடைக்கும். ஏறிக்கொள் என் முதுகில்; புறப்படுவோம் பயணம்" என்றது

மனிதர்களையெல்லாம் கடவுளின் அடிமைகளான இந்த தேவதைகளும், அவற்றின் எஜமானரான கடவுளும் கெடுத்து குட்டிச் சுவராக்கி விடுகிறார்கள். மிகவும் கஷ்டப்பட்டதாகச் சொல்லிக் கொள்வதுதான் பெருமை என்று மனிதர்கள் எண்ணும்படியான நிலைமையை உண்டாக்கியதே அவர்கள்தான். என் கொள்கை இதற்கு நேர்மாறானது; பல தொல்லைகளுக்கிடையே விடாப்பிடியாக மாபெரும் சாதனை ஒன்றைப் புரிந்ததாகக் கூறிக் கொள்வதுதான் பெருமை என்பதுதான் என்சித்தாந்தம். வா. போகலாம் என்று தொடர்ந்து உபதேசித்தவாறு வாத்தியாரையாவின் ஆத்மாவைப் பிடித்து இழுத்தது.

"அப்படியா? உன்னோடு வந்தால் நினைப்பதைப் பேசும் சுதந்திரமும் கட்சிகள், அரசியல் பற்றியெல்லாம் விமர்சிக்கும் உரிமையும் பத்திரிகைகள் படிக்கிற பாத்தியதையும் எனக்கு கிடைக்குமா?" என்று ஆவலோடு கேட்டது வாத்தியாரையாவின் ஆத்மா. "கிடைக்கும், கிடைக்கும்; போகலாம்வா" என்று தலையை ஆட்டிய வண்ணம் அவசரப்படுத்தியது சாத்தான்.

வாத்தியாரையாவின் ஆத்மா சாத்தானின் முதுகில் தாவியேறிக்கொண்டது. "போகாதே" அவனுடன் போகாதே! நீ நல்ல ஆத்மா... சொர்க்கத்துக்கு வரவேண்டிய ஆத்மா" என்று அரற்றியவாறு தேவதை வாத்தியாரையாவின் ஆத்மாவை கெஞ்சியது.

"சீ, என் வழியில் குறுக்கிடாதே!" என்று தேவதையை மல்லாக்கத் தள்ளிவிட்டு சாத்தானின் முதுகில் தொத்தியவாறு தன் பயணத்தைத் தொடர்ந்தது வாத்தியாரையாவின் ஆத்மா.



## அமுதவாக்கு

அச்சமில்லை மயங்குவதில்லை
அன்பும் இன்பமும் மேன்மையும் உண்டு
மிச்சமில்லை பழந்துயர் குப்பை
வெற்றியுண்டு விரைவினில் உண்டு



Edited. Printed and Published by TRILOKASITARAM at his S. N. Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.